26th August 1961]

முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. எதாவது ஒரு நல்ல காரியத்தைச்செய்தால், அது ஓரளவு செய்யப்பட்டிருக்கிறது என்பதை ஒப்புக்கொண்டு இன்னும் அதிகமாகச் செய்யவேண்டும் என்று வற்புறுத்துவதுதான் அழகு.

SRI M. KALYANASUNDARAM : தனிப்பட்ட முதலாளிகள் முன் வராவிட்டாலும் அந்தப் பகுதியிலுள்ள பஞ்சாயத்துக்கள் தோட்டத் தொழிலாளர்களுக்கு வீடு கட்ட முன் வந்தால் பஞ்சாயத்துக்களுக்கு சர்க்கார் கடன் வழங்குவார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இப்போது அந்த விதமான ஸ்கீம் எதுவும் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இல்லை.

*Lead (Udayarpalayam taluk)*

* 1428 Q.—SRI S. RAMALINGA PADAYACHI: கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) திருச்சி மாவட்டம், உடையார்பாளையம் வட்டம், சுண்டக்குடி கிராமத்தில் வெள்ளீயம் கண்டுபிடிக்கப்பட்டதா ?

(இ) அது விஷயமாக எடுத்த நடவடிக்கை என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI S. RAMALINGA PADAYACHI : சுண்டக்குடி என்ற கிராமத்தில் கிணறு வெட்டியபோது 22 அடிக்குக் கீழே முதலில் வெள்ளி சன்னமாகத் தோன்றியது என்றும் அதனை உறுக்கி பார்த்ததில் பிறகு அது வெள்ளீயம் என்று சொல்லப்பட்டதே, அது உலோக ஆராய்ச்சி நிபுணர்களைக்கொண்டு சர்வே செய்யப்பட்டதா ? இல்லையென்ருல் இனி சர்வே செய்யப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இந்த சுண்டக்குடி என்ற கிராமத்தில் ஒரு கிணறு வெட்டினூர்கள். கிணற்றில் துத்துநாகம் கொஞ்சம் தென்பட்டது. அதை எடுத்து ஆராய்ச்சி செய்து பார்த்ததில், பழைய கிணறில் ஒரு சாமான் விழுந்திருக்கிறது போல இருக்கிறது (சிரிப்பு); ஏனென்ருல் மெட்டலிக் ஸிங்குக்கும் ஸிங்க் ஒருக்கும் வித்தியாசம் இருக்கிறது. ஸிங்க் ஓர் ஸிங்காக இருக்காது. அங்கு மெட்டலிக் ஸிங்க் அகப்பட்டது. அதனால் எதோ பாத்திரம் அங்கு விழுந்திருந்து அப்போது அகப்பட்டிருக்கிறது. அவ்வளவுதான்.

*Express buses (Madras to Thanjavur)*

* 1429. *Q.*—SRI T. L. SASIVARNA THEVAR : Will the Hon. the Minister for Industries be pleased to state whether bus tickets in the Madras State Transport Express Buses plying from Madras to Thanjavur are issued only to those passengers who take their food in the Brindavanam Hotel at Cuddalore; and if so, the reasons therefor?

THE HON. SRI R. VENKATARAMAN : There is no basis for the question.

*House Building Schemes*

* 1430 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the different House Building Schemes for which Government have given loans or grants for the current year; and

(*b*) the amount given and the number of houses constructed so far?